## ௮

# அனுமானங்கள் நம்பிக்கைகள்

அந்தப் பெரிய கம்பி ஜன்னலுக்கு ஒரு கனமான திரையைப் போட்ட மாதிரி மணிப்ளாண்ட் தன்னுடைய கொடிகளைப் பரப்பி இருந்தது. இளம் பச்சையாகப் புதிய இலைகள் பளபளத்துக் கொண்டு, பழையவை சற்று மங்கி ஒரு தீவிரத்துடன் படர்ந்திருந்தது. பரபர வென்று தூசி தட்டிக் கொண்டிருந்த மாலதி ஒரு வினாடி நின்று ஒரு இரவுப்போதுக்குள் துருத்திக் கொண்டு நின்றிருந்த புதிய கொடிகளை கம்பிச் சட்டத்துக்குள் நுழைத்து விட்டாள். இந்த வீட்டிற்கு வந்த புதிதில் வேலைக்காரி ஒரு சின்னத் துண்டைக் கொண்டு வந்து கொடுத்தாள். அதை அவளே ஒரு சின்ன மண் தொட்டியில் வைத்து விட்டுப் போனாள். நான்கு இலைகளோடு இருந்த அந்தச் சின்னத் துண்டு இதுதான் என் வாசஸ்தலம் என்கிற மாதிரி எத்தனை சீக்கிரம் வேர்களைக் கிளை பரப்பி இலைகளை மேலே விரித்துக் கொண்டு விட்டது. இப்பொழுது இந்த ஜன்னலுக்குத் திரையே அவசிய மில்லாமல் போய்விட்டது. வெய்யிலுக்கு இதமான, கண்ணுக்குக் குளிர்ச்சியான திரை. வீட்டுக்கு வருபவர்கள் எல்லாரும் பார்த்து அதிசயப்படும் திரை.

''ஓ! உங்க வீட்டிலே எத்தனை நன்னா வளர்ந்திருக்கு இந்தச் செடி!''

''பணத்துக்குப் பஞ்சமில்லேன்னு அர்த்தம்!''

அவள் சிரிப்பாள்.

''இந்த இலையெல்லாம் உங்க கண்ணுக்குக் கரன்ஸி நோட்டாத் தெரியறதா?''

''கரன்ஸி நோட்டோ இல்லையோ, இந்த மாதிரி வளர்ந்ததானா வீட்டு சுபிட்சத்தைக் காட்டறதா சொல்லுவா...''

''சுபிட்சம்னா பணம் இருக்கிறதா அர்த்தமா?''

''ஆமாம்.''

அவள் விளையாட்டாகப் பேச்சை ஆரம்பித்துத் தீவிரமாக தலையை அசைப்பாள்.

''பணம் இருக்கிறவா வீட்டிலேயெல்லாம் சுபிட்சம் இருக்கிறதா எனக்குத் தெரியல்லே...!''

''பணத்துக்குத்தான் சுபிட்சம்னு பேரு....!''

அவள் 'இல்லை' என்று தனக்குள் சொல்லிக் கொள்வாள்.

''எங்கம்மா அப்பா வீட்டிலே ரொம்பப் பணம் இருக்குன்னு சொல்ல முடியாது. ஆனா சுபிட்சம் இருக்கிறதா எனக்குத் தோணும். எங்க மாமனார் வீட்டிலே எக்கச்சக்க பணம். அங்கே சுபிட்சமே இல்லேன்னு தோணும்...''

''சரிதான். உனக்குன்னு ஏதாவது தோணும். எல்லாத்திலேயும் உனக்கு வித்தியாசமான பார்வை.''

இந்தச் செடியை தினம் பார்க்கும் போதெல்லாம் இந்த சம்பாஷணைகள் நினைவுக்கு வரும். உதட்டில் புன்னகை மலரும்.

'உங்களுக்குத்தான் வித்தியாசமான பார்வை' என்று அவள் தனக்குள் சொல்லிக் கொள்வாள். எதையும் பணத்தைக் கொண்டு அளக்கிற பார்வை. வைரத்தையும் தங்கத்தையும் மட்டும் மதிப்பு போடும் பார்வை. வைரத்தோடு போடாதவர்களை அவளுடைய

மாமியார் மதித்துப் பேசவே மாட்டாள். அவளுடைய அம்மாவை இன்னமும் சமதையாக பாவித்துப் பேசுவதில்லை...

'நஷ்டம் உங்களுக்குத்தான்' என்று அவள் முணுமுணுத்துக் கொள்வாள். மனிதர்களை மனிதர்களாகப் பார்க்கத் தெரியாதவர்கள். நீங்கள்தான் வித்தியாசமானவர்கள். நான் என் குழந்தைகளை உங்களை மாதிரி நினைக்க விடமாட்டேன். எத்தைக் கண்டாலும் காசின் நினைவு வராமல், எடைபோட்டு பேரம் பண்ணும் புத்தி வராமல், செடியைக் கண்டாலும் அதில் பணத்தைக் காணும் பார்வை வராமல் பார்த்துக் கொள்வேன்...

அவளுக்கு ஊரும் வீடும் காம்பவுண்டு முழுவதும் நிழலை விரித்துக் கொண்டு நின்ற அரசமரமும் ஊஞ்சலும் நினைவுக்கு வந்தன. மரத்தில் வாசம் செய்த பலநிற பட்சிகளின் நினைவு வந்தது. தோட்டத்து மூலையில் தோட்டத்துக்குத் தண்ணீர் பாய்ச்சுவதற்காக ஒரு குழாய் உண்டு. அப்பா வேலைக்குப் போவதற்கு முன் அதில் ட்யூபைப் பொருத்தி, செடிகளின் பாத்திகளில் வைத்துவிட்டுப் போவார். அதிலிருந்து விரியும் சின்னச் சின்ன ஓடைகளில் நீர் அருந்த அரசமரத்து பட்சிகளெல்லாம் இறங்கி வந்து உட்காரும். எத்தனை தினுசு பட்சிகள்! ஊர் தெரியாத பெயர் தெரியாத பட்சிகள் - கருநீல மாய் இளமஞ்சளாய் மயில் கழுத்தாய்... 'பொளக் பொளக்' 'சதக் சதக்'கென்று சப்தமிட்டபடி அவை நீரில் விளையாடுவதை நாள் முழுக்கப் பார்க்கலாம் போல் இருக்கும். தோட்டத்தில் அப்பா போடும் விதவிதமான பூச்செடிகளைத் தேடிக் கொண்டு பல தினுசு வண்ணாத்தி பூச்சிகள் வரும்... அவற்றைத் துரத்திக் கொண்டு ஓடுவது பெரிய வேடிக்கையாக இருக்கும். அந்த மாதிரியெல்லாம் ஒரு தோட்டத்தைப் பார்த்து அழகை அனுபவிக்காதவர்கள்தான் இந்த மணிப்ளாண்டைப் பார்த்து மங்கமாண்டு போவார்கள் என்று தோன்றிற்று. அதுவும் இந்தச் செடிக்கும் பணத்துக்கும் ஏதோ சம் பந்தம் கற்பித்துக் கொண்டு படும் சந்தோஷம்... ரஸனையிலும் வியாபாரத்தனம்...

அவள் அந்தச் சின்னத் தொட்டிக்குள் ஒரு குவளை நீர் விட்டு விட்டு தன்னுடைய மற்ற அலுவல்களைப் பார்க்கச் சென்றாள். மாமியார் சாப்பிட்டு விட்டுப் படுத்துக் கொண்டு விட்டிருந்தார். அவள் சட்டென்று கடிகாரத்தை பார்த்தாள். ஒன்றடிக்க பத்து நிமிஷம். ஓ, சூர்யா வரும் நேரமாகிவிட்டது. பஸ் ஸ்டாப்பிற்குச் சென்று அவனை அழைத்து வரவேண்டும். அவள் அவசரமாக சமைய லறையை இழுத்து சாத்திவிட்டு நிலைக்கண்ணாடியைப் பார்த்து முன் நெற்றியையும் குங்குமத்தையும் சரி செய்துகொண்டு காலில் செருப்பை மாட்டிக்கொண்டு கிளம்பினாள். வாயிற்கதவை சப்த மில்லாமல் சாத்தி பூட்டி மாடிப்படிகளைக் கடக்கையில் நேரமாகி விட்டது என்று கால்கள் பரபரத்தன.

அவள் தெரு முனையில் திரும்பும்போது சூர்யாவின் ஸ்கூல் பஸ் வந்து நிற்பது தெரிந்தது. அவள் வேகமாக நடந்தாள். சூர்யா நிதானமாக பஸ்ஸிலிருந்து இறங்கினான். இறங்கியதும் அவளைப் பார்த்து லேசாகச் சிரித்தான். அழகிய முகம் களைப்பில் வாடி யிருந்தது. அவள் அவனுடைய பையை வாங்கிக் கொண்டாள். அவன் அவளைப் பார்த்து ஒரு சின்னச் சிரிப்பு சிரித்துவிட்டு, அவள் கையைப் பிடித்துக் கொண்டு நடந்தான். பிறகு திடீரென்று நினைவுக்கு வந்தவன் போல் சொன்னான்:

''டிபன் பாக்ஸிலே ஏன் மூணு பரோட்டா வெச்சிருந்தே? இரண்டுதானே வைக்கச் சொன்னேன்?''

''இரண்டு போறாதுன்னு வெச்சேன்.''

''என்னாலே மூணாவதை சாப்பிட முடியல்லே!''

''போனாப் போறது!''

''நீதானே எதையும் வேஸ்ட் பண்ணக்கூடாதுன்னு சொல்லுவே?''

அவள் சிரித்துக்கொண்டே அவனுடைய இடையை அணைத்துக் கொண்டாள்.

''இது வீணாப் போகாது. வேலைக்காரிக்கு கொடுப்பேன்.''

அதில் அவன் சமாதானமாகிப் போனது போல் பேசாமல் நடந்தான்.

''அம்மா, எங்க ஸ்கூலிலே ஒரு மரம் இருக்கு, அதிலே திடீர்னு பூ பூத்திருக்கு. எத்தனை அழகாயிருக்கு தெரியுமா?''

''என்ன பூ?''

''என்னவோ பூ. வெள்ளையும் சிவப்புமா. எத்தனை அழகும்மா அது!''

அவள் புன்னகையுடன் அவனைப் பார்த்தாள்.

''எனக்கு ஒரு பூ பறிச்சுண்டு வந்து காமியேன் நாளைக்கு...''

''ஓ, அது ரொம்ப கஷ்டம்!'' என்றான் அவன் தீவிரமான முகபாகத்துடன்.

''மரத்து மேலேன்னா இருக்கு! எனக்கு எட்டாதே!''

''அப்ப பரவாயில்லே விடு!''

''ரொம்ப அழகான விஷயத்தையெல்லாம் சுவாமி எட்டாத உயரத்துக்கு வச்சுடறார், இல்லேம்மா?''

அவள் ஆச்சரியத்துடன் அவனைப் பார்த்தாள்.

''இல்லையே!''

''ஆமாம்''

என்றான் அவன் தீர்மானமாக.

''சந்திரனைப் பாரு, நட்சத்திரத்தைப் பாரு, ஆகாசத்தைப் பாரு.... அதையெல்லாம் தொட முடியுமா? பர்ட்ஸ், பட்டர்ப்ளைஸ் கூட மேலே பறந்துபோயிடறது பிடிக்கறதுக்குள்ளே...!''

அவனுடைய வியாக்கியானமும் வேதாந்தமும் அவளுக்குச் சிரிப்பைத் தந்தன. தன்னை மாதிரி அவனுக்கும் எல்லாவற்றையும் ரஸிக்கத் தெரிகிறதே என்று சந்தோஷமேற்பட்டது... இன்னும் கொஞ்ச நாட்களேனும் இவனுக்கு இந்த ரஸனை இருக்கும். அப்பாவின் பாட்டியின், அத்தைகளின் கூட்டிக் கழிக்கும் குணம் இவனைக் கொத்திக் கொள்கிறவரை. அந்தக் குணம் இவன் மேல் படியும்போது அவனுக்கு அந்த மரத்தின் பூவும் சந்திரனும் ஆகாசமும் கண்ணுக்குத் தெரியாது பார்வையே மங்கிப்போகும், மனசு சுருங்கிப் போகும். சுருங்கிப்போய் அங்கு ஒரே ஒரு விஷயத்துக்குத்தான் இடமிருக்கும்...

சட்டென்று அவளுடைய மனதை ஒரு சோகம் நிறைத்தது. அந்த மாதிரி ஒரு வறுமை இவன் மனசுக்குள் புகுந்து கொள்ளாமலிருக்க ஏதாவது வழியிருக்குமா?

அம்மா அப்பாவின் நினைவு வந்தது. கூடவே அவர்கள் நினைவோடு பிரிக்க முடியாத நினைவு மாதிரி அந்த அரசமரமும் பூக்களும் பட்சிகளும் நினைவுக்கு வந்தன... அம்மாவுக்குப் பெண்ணுக்குத் தினுசு தினுசாக நகைகள் செய்து போட்டுப் பார்க்கவேண்டும் என்று ஆசை. அப்பா வார்தா ஆசிரமத்தில் இருந்தவர்.

''உன் பெண்ணுக்கு ஆண்டவன் கொடுத்திருக்கிற அழகு போறாதுன்னு நீ நினைக்கிறியா? அவளுக்கு எந்த விதமான அலங்காரமும் தேவையில்லை'' என்பார்.

''உங்களோடேயே இருக்க அவ பிறந்திருக்காளா? கல்யாணத்துக்கு நிற்கிற பெண்ணுக்கு இரண்டு நகையாவது போடாட்டா எப்படி?''

''அவளுக்காகவே அவளைக் கல்யாணம் பண்ணிக்கிறவனா வரட்டும்! அப்பத்தான் கல்யாணம் பண்ணிக் கொடுப்பேன். இந்த மாதிரி ஒரு பெண் ஜெகத்திலே கிடைப்பாளா மீனு? படிச்சு பதவிசா, மனசிலே கல்மிஷமே இல்லாம, பிரியத்தைத் தவிர வேறெதுவும் காட்டத் தெரியாமெ!''

''என் பொண்ணு எத்தனை ஸிம்ப்பிள் பார்த்தியா?''

வீடு வந்துவிட்டது. கேட்டைத் திறந்துகொண்டு சூர்யா உள்ளே ஓடினான்.

'ஸிம்பிள்னா' அசடுன்னு அர்த்தம்ப்பா. அது உங்களுக்குத் தெரியாதா? பணம் காசுன்னா நாட்டமில்லாமெ, நகை நட்டு மேலே கரிசனம் இல்லாம இருந்தா அசடுன்னு அர்த்தம். இந்தப் படிகளைக் கடந்து மேலே போய் நான் நடத்தற வாழ்க்கை உங்களுக்குத் தெரியுமா?

கண்களில் துளிர்க்கப்பார்த்த கண்ணீரை அவள் உள்ளுக்குள் இழுத்துக் கொண்டாள். இந்த கண்ணீர்த் துளிகளும் அடிவயிற்றைச் சுற்றிக் கொண்டு நிற்கும் துக்கமும் அடிக்கடி ஏன் வருகிறது என்று அவள் எவ்வளவோ முறை திகைத்திருக்கிறாள்.

நான் நன்றாக இருக்கிறேனே? வசதியான வீடும் வெளியில் வாசலில் போகக் காரும், பர்ஸ் நிறையப் பணமும் எதிர்பார்க்காத வசதிகளும்- எல்லாம் இருக்கிறதே! கணவன் வீட்டில் பூட்டிய நகைகளோடு வெளியில் பவனி வருகையில், ''ஓ! அவளுக்கு எத்தனை அதிஷ்டம்'' என்று இப்பவும் அந்த பக்கத்துவீட்டு சரோஜா பெருமூச்சு விடுவாள். ஐயோ பாவம். அந்த சரோஜாவுக்குத் தெரியாது நகைகளுக்கும் எனக்கும் எந்தவித பந்தமும் கிடையாது என்று. ஒரு கோட் ஸ்டாண்டுக்கும் அதன் மேல் தொங்கும் கோட்டிற்கும் எந்தவித பந்தமும் இல்லாத மாதிரி-ஓ! இதெல்லாம் அந்த சரோஜாவுக்குப் புரியாது... அப்பாவிடமிருந்து கற்றுக்கொண்ட மனோபாவம் இது....

பணத்தைச் துச்சமாக மதித்த அப்பா... அவர் எப்படி சம்பாதித் தார், எப்படி அவளுக்குக் கல்யாணம் செய்து வைத்தார் என்பதே இப்பொழுது யோசித்துப் பார்க்கையில் புரியவில்லை. அவளுடைய அதிர்ஷ்டம் அவர் நினைத்தபடியே அவளை அவள் அழகுக்காகப் பெண் கேட்டுக்கொண்டு வந்தார்கள். எங்களுக்கு அழகும் குணமும்தான் முக்கியம் என்றார்கள்-அவளுடைய அழகுக்கும் குணத்துக்கும் சம்பந்தம் இருக்கிற மாதிரி கூடை நகையை செய்து கொண்டு வந்து போட்டு அழகு பார்த்தார்கள். அந்தக் கூடை நகைதான் இவர்களது பார்வையையே மறைத்துவிட்டது இப்போது. இப்பொழுது அழகும் தெரியவில்லை. பணமும் கண்ணுக்குத் தெரியவில்லை...

அன்றைக்கு சூர்யாவின் பள்ளிக்கூட டயரியைத் திறந்து பார்க்கையில் அவனுக்கு அடுத்த வாரத்திலிருந்து பரீட்சை என்று தெரிந்தது. நான்கு நாட்கள் பரீட்சை. அதற்குப் பிறகு டிஸம்பர் விடுமுறை இருபது நாட்கள். அவளுக்குச் சட்டென்று ஒரு ஆசை மனசில் துளிர்த்தது. ஊருக்கப்போய் விட்டு வந்தால் என்ன? அம்மாவையும் அப்பாவையும் பார்த்து இரண்டு வருஷங்கள் ஆகிறது. அப்பாவின் உடம்பும் பழைய ஆரோக்கியத்தில் இல்லை என்று அம்மா ஒவ்வொரு கடிதத்திலும் எழுதுகிறாள். போய்ப் பார்த்துவிட்டு வந்தால் என்ன? எண்ணம் தோன்றின உடனேயே கற்பனை பந்தல் விரிந்துக் கொண்டு போயிற்று. அவளையும் சூர்யாவையும் கண்டு அம்மாவும் அப்பாவும் மகிழ்ச்சியில் திளைத்துப் போவார்கள். ஓ! அவளுக்கும்தான் எத்தனை இதமாக இருக்கும் அந்த மாறுதல்! எந்தப் பொறுப்பும் இல்லாமல் அம்மாவின் கைச்சமையலைச் சாப்பிட்டுக் கொண்டு தோட்டத்தில் சுற்றி சுற்றி வந்து கொண்டு-எத்தனை ரம்யமான பொழுதாக இருக்கும் அது! மீண்டும் அந்த அரசமரம், அந்தப் பட்சிகள், பூக்கள் அதை நாடி வரும் வண்ணாத்திப் பூச்சிகள்... எத்தகைய சுவர்க்கம் அது!

அவளுக்கு நினைப்பே இனித்தது. நினைக்க நினைக்க போதை ஏறிற்று. இன்றைக்கு நிச்சயமாக கணவனைக் கேட்க வேண்டும் இரவு

என்று அவள் நினைத்துக் கொண்டாள். ஊரின் நினைவு மனசில் ஏற்பட்ட பிறகு அதன் உத்வேகத்தை அடக்க முடியாமல் போய் விட்டது. சூர்யாவுக்குப் பாடம் சொல்லித் தருகையில், சமையலுக்கு தயார் செய்கையில் ஸ்வாமிக்கு விளக்கேற்றுகையில் திமிறிக் கொண்டு இடையில் நின்றது.

''பாட்டி தாத்தாவைப் பார்க்கப் போகலாமா சூர்யா?''

''ஓ, போகலாமே! எப்போ?''

''உனக்குப் பரீட்சை முடிந்ததும் லீவு விடுவாளே அப்போ!''

''ஓ, போகலாமே!''

உடனடியாக அந்த பதில் அவளுக்கு ஒரு திருப்தியை ஏற்படுத்தியது -அனுமதி கிடைத்துவிட்ட மாதிரி.

அன்று இரவு சாப்பாடெல்லாம் முடிந்த பிறகு சூர்யாவும் தூங்கிப் போன பிறகு அவள் கணவன் படுக்கைக்கு வருவதற்காகக் காத்திருந்தாள். ராமகிருஷ்ணனிடம் எந்த வகையில் சொன்னால் சம்மதம் கிடைக்கும் என்று அவள் மனத்துக்குள் ஒரு சம்பாஷணை உருவாக்கிக் கொண்டு ஒத்திகை பார்த்துக் கொண்டாள்.

ராமகிருஷ்ணன் வெகு நேரம் வரை அவளுடைய பொறு மையை சோதிக்கிற மாதிரி கணக்கு வழக்குகளைப் பார்த்தபடி உட்கார்ந்திருந்தான். இன்றைக்கு இவர் சம்மதிக்க வேண்டுமே என்று வேண்டியபடி அவள் படுத்திருந்தாள்.

அவன் கடைசியில் ஒரு நீண்ட கொட்டாவி விட்டபடி வந்து படுத்துக் கொண்டான். அவள் மெல்ல அவனுடைய கழுத்தில் கையை வளைத்துக் கொண்டாள். அவன் ஒரு லேசான ஆச்சரியத்துடன் அவள் பக்கம் திரும்பி அவளை அணைத்துக் கொண்டான்.

''என்ன இன்னிக்கு இன்னும் தூங்கல்லே....?''

அவனுடைய குரல் மிருதுவாக இருந்தது சற்று தெம்பை யளித்தது.

''என்னவோ யோசனையிலே தூக்கம் வரல்லே...''

''அட, உனக்குக்கூட பெரிய யோசனைகள் உண்டா? தூக்கத்தைக் கெடுக்கிற அளவுக்கு...?''

அவனுடைய எகத்தாளமான சிரிப்பு மனசில் லேசாகக் கீறிற்று.

நான் ரோசப்படக்கூடாது. பட்டால் எதையும் நிறைவேற்றிக் கொள்ள முடியாது.

தன் அணைப்பை இன்னும் இறுக்கியபடி அவன் கேட்டான்.

''என்ன யோசனை?''

அவளுக்கு மார்பு லேசாகப் படபடத்தது ஒரு பயத்தில். அனுப்ப மாட்டேன்; போக வேண்டியதில்லை என்று சொல்லி விடுவானோ?

''ஒண்ணுமில்லே. சாதாரண விஷயம்தான். சூர்யாவுக்குப் பரீட்சை. அப்புறம் லீவு வருமே. அப்ப ஊருக்குப்போகலாமான்னு யோசிச்சேன்.''

சட்டென்று அவனுடைய அணைப்பில் ஒரு விறைப்பு ஏற்பட்டது. அது அவனுக்கு சாதாரண விஷயமில்லை என்று அவளுக்குப் புரிந்தது. அவளுக்கும் அவனுக்குமிடையில் அவனாக எழுப்பி அவளை விலக்கப் பார்க்கும் சுவர்... இந்த சுவரைத் தாண்டிக் கொண்டு அவனை அணுகுவது சாத்தியமா?

கூட்டலும் கழித்தலும் லாபமும் நஷ்டமும்தான் இவன் கணக்குப்படி யோசனைக்கேற்ற விஷயங்கள், பாக்கியெல்லாம் மனதை, ஆன்மாவை பாதிக்கும் விஷயங்கள் எல்லாம் அற்ப விஷயங்கள்...

''காரணமில்லாமெ எதுக்கு இப்பப் பிரயாணம்...?''

அவளுக்கு ஆயாசமாக இருந்தது. இரண்டு வருஷங்களாக இதே மாதிரி சால்ஜாப்புகளைச் சொல்லி மழுப்பிக் கொண்டிருக் கிறான் என்கிற சீற்றம் ஏற்பட்டது. இந்த முறையும் அதையே

சொல்லிப் போக விடாமல் செய்துவிடுவானோ என்கிற பயம் ஏற்பட்டது. மத்தியானத்திலிருந்து கட்டிய கோட்டைகளுக்கும் கண்ட கனவுகளுக்கும் அர்த்தமே இல்லாமற் போய்விடுமோ என்று தோன்றிற்று.

''அப்பா அம்மாவைப் பார்க்கணும் போல இருக்கு. பார்த்து ரெண்டு வருஷமாறதே. அப்பாவுக்கும் உடம்பு நன்னாயில்லேன்னு அம்மா எழுதிண்டே இருக்காளே...!''

அவன் சற்று நேரம் பேசாமல் இருந்தான்.

''அப்படியொண்ணும் நீ போய்ப் பார்க்கும்படியா உடம்புக் கோளாறில்லை...''

சீ! இத்தனை குரூரமா உனக்குள்?

ஓசைப்படுத்தாமல் அவள் அழுதாள்.

ராமகிருஷ்ணன் ஒரு அலுப்புடன் தன் கழுத்தைச் சுற்றிக் கொண்டிருந்த அவளுடைய கையை விலக்கினான்.

''எதுக்கு இப்போ இந்தச் சின்ன விஷயத்துக்கெல்லாம் அழுகை?''

அவள் பதில் பேசாமல் கண்ணீர் விட்டபடி இருந்தாள்.

உங்களுக்குச் சின்ன விஷயம். எனக்கு மகாப் பெரிசு. இங்கெல்லாம் கிடைக்க முடியாத சந்தோஷம் எனக்கு அங்கே கிடைக்கும் என்கிற பெரிய விஷயம் அது... என்னுடைய வேர்கள் சில இன்னும் அங்கே இருக்கிறது. ஒரேயடியாய் என்னால் பிய்த்துக் கொண்டு வரமுடியாது. நீங்கள் என்னை மனுஷியா பார்க்கவில்லை. வெறும் பண்டமாகப் பார்க்கிறீர்கள். நீங்கள் வாங்கிக் கொண்டு வந்துவிட்ட பண்டம். உங்களுடைய உடமையாகிப் போன பண்டம். எண்ணங்களும் ஆசைகளும் ஏக்கங்களும் இருக்க லாயக்கற்ற பண்டம்...

நினைக்க நினைக்க துக்கம் குமுறிக் கொண்டு வந்தது.

''ஒரு பதினைஞ்சு நாள் நானும் சூர்யாவும் போய்விட்டு வந்தா என்ன ஆயிடும்? இங்கே சமையலுக்கு ஆள் இருக்கான். மேற் பார்வையெல்லாம் அம்மா பார்த்துப்பார். நா இல்லாத போனாலும் உங்களுக்கு ஒண்ணும் கஷ்டமேற்படாது. போயிட்டு வரேன் ப்ளீஸ்.''

ஒரு நியாயமான விஷயத்திற்காக இவ்வளவு யாசிக்க வேண்டிய நிலை மிகக் கேவலமான நிலை என்று ஒரு சீற்றம் அவளுள் எழுந்தது.

''சூர்யாவுக்கெல்லாம் அங்கே போனால் கஷ்டம்!''

அவள் அந்த அவமானத்தைக் கஷ்டப்பட்டு விழுங்கிக் கொண்டாள்.

''என்ன கஷ்டம்?''

''அங்கெல்லாம் கட்டிலும் மெத்தையும் இல்லே. இங்கே இருக்கிற புஷ்டியான ஆகாரம் அங்கே கிடையாது.''

''நா அங்கே பிறந்து வளர்ந்தவள்தான். நான் நல்ல ஆரோக்கிய மாத்தான் இருக்கேன்...''

அவள் அலுப்புடன் திரும்பிப் படுத்தாள். இவனோடு வாதம் செய்து லாபமில்லை என்று நினைத்துக்கொண்டாள்.

இந்த மாதிரி ஒரு கணவன் இருக்கையில் எந்த நம்பிக்கையில் மத்தியானமெல்லாம் கற்பனைத் தேரைப் பூட்டிக் கொண்டு பறந்தோம் என்று திகைப்பாக இருந்தது...

ராமகிருஷ்ணனின் கை அவளுடைய இடையை வளைத்தது.

''இப்படித் திரும்பு.''

அவள் திரும்பினாள்.

''சரி. போயிட்டு வா.''

அவளுக்குத் திகைப்பாக இருந்தது. அவன்தானா சொன்னான் என்று நம்புவது கஷ்டமாக இருந்தது.

அவனுடைய மார்பில் அவள் முகத்தைப் புதைத்துக் கொண்டாள்.

''தாங்க் யூ.''

''பதினைஞ்சு நாள்தான். அதுக்கு மேலே இல்லே...''

''சரி.''

அவனுடைய அணைப்பிலும் நெருக்கத்திலும் நான்தான் எப்படியும் வென்றேன் என்கிற ஒரு மதர்ப்பு தெரிவதை அவள் உணர்கையில் அவளுடைய உதடுகளில் புன்னகை அரும்பிற்று...

மதியீனங்களில் எத்தனை விதமான மதியீனங்கள்! பணப் பெருமையும் அகங்காரமும் ஆண் என்கிற திமிரும்...

ஆன்மாவின் பார்வையையே மறைக்கும் மதியீனங்கள். ஆண்டவனே நீதான் இவர்களை ரட்சிக்க வேண்டும். மற்றவர்களின் எண்ணங்களையே பொருட்டாக மதிக்கத் தெரியாத இவர்களுடைய எண்ணங்களை நீதான் மாற்ற வேண்டும்...

காலையில் கண் விழித்ததுமே, ஓ, கடைசியில் நாம் ஊருக்குப் போகப் போகிறோம் என்கிற ஞாபகம் ஒரு திகைப்பைத் தந்தது. மனசு இறக்கை கட்டிக் கொண்டு ஆகாசத்தில் மிதந்தது. அம்மாவுக்கு இன்றைக்குக் கடிதம் எழுத வேண்டும். அடுத்த வாரம் வருவேன் என்று. அதைப்படித்ததும் அம்மா சந்தோஷத்தில் திணறிப் போவாள். தினுசு தினுசாகத் தின்பண்டங்கள் செய்து வைக்க ஆரம்பிப்பாள். அவளுடைய கைப் பண்டத்துக்குத்தான் எத்தனை ருசி! அவளுடைய பிரியத்திற்கு இணையானது தான் எது? அந்தப் பிரியத்தை நினைக்கையிலேயே கண்களில் நீர் நிறைந்து கொண்டு வந்தது.

அன்று காலையிலிருந்தே அவளுடைய மாமியாரின் பேச்சில் ஒரு அதிருப்தி தொனிப்பதை அவள் கவனித்தாள். ராமகிருஷ்ணன்

தன் அம்மாவிடம் அவள் ஊருக்குப் போவதைப் பற்றிச் சொல்லி இருக்க வேண்டும் என்று அவள் புரிந்து கொண்டாள். மாட்டுப் பெண்ணைப் பிறந்தகத்துக்கு அனுப்ப இவர்கள் ஏன் இத்தனை யோசிக்க வேண்டும், ஆட்சேபிக்க வேண்டுமென்று அவளுக்குப் புரியவில்லை. வேலைக்காரிக்கு லீவு கொடுக்க மனசில்லாத மாதிரி அவளை அனுப்பவும் அவர்களுக்கு மனசு வருவதில்லை. அடிமைத் தனத்தில் இதுவும் ஒரு தினுசு...

''பொறந்தாத்துக்குப் போறதா தீர்மானிச்சிருக்கியாமே?''

இதற்கு எந்த வகையில் பதில் சொல்வது என்று ஒரு விநாடி அவள் திகைத்தாள்.

''நானா தீர்மானிக்கல்லே. போயிட்டு வரட்டுமான்னு உங்க பிள்ளையைக் கேட்டேன்...''

''ராத்திரி படுக்கையிலே படுத்துண்டு இந்தக் கேள்வியைக் கேட்டா அவன் வேண்டாம்னா சொல்லுவான்?''

அவளுக்கு முகம் சிவந்தது. எப்படி இவர்கள் பெரிய மனிதர் கள் என்று சொல்லிக் கொண்டு இப்படி நாகரீகமே இல்லாமல் பேசுகிறார்கள் என்று ஆத்திரம் வந்தது.

அவள் பதிலே பேசாமல் தொங்கிய முகத்துடன் தன் வேலைகளில் ஆழ்ந்தாள்.

''சரி, சரி எனக்கென்ன வந்தது? போனா அங்கேயே டேரா போடாமெ இருந்தா சரி...''

''பதினைஞ்சு நாள், சூர்பாவுக்கு ஸ்கூல் திறந்துடுவாளே!''

''அதுக்கு மேலே அங்கே இருக்கிறதுக்கு என்ன இருக்கு?''

அவள் பல்லைக் கடித்துக் கொண்டு நகர்ந்தாள். இந்த மாதிரிப் பேச்சுக்களைக் கேட்டுக் கேட்டுப் பழக்கமாகிவிட்டது. நாகரீகமான பேச்சு என்ன என்பதையே மறந்து போகிற அளவுக்கு. இப்பொழுது

ஊருக்குப் போவதே ஒரு ஷேத்திராடனம் மாதிரி. ஜடமாகிப் போன மனசுக்கு ஞானஸ்நானம் செய்விக்கிற மாதிரி....

அவள் ஊருக்குக் கிளம்ப இருந்த அந்த ஒரு வாரப் போதுக்குள் ராமகிருஷ்ணனும் அவனுடைய அம்மாவும் சமாதானமாகிப் போனார்கள். ஏதோ வனாந்திரத்துக்கு சூர்யாவை அழைத்துப் போகிற மாதிரி நூறு முறை ஜாக்கிரதை சொன்னார்கள்.

ஊருக்குக் கடிதம் எழுதி தந்தி அடித்துவிட்டு மூட்டை கட்டிக் கொண்டு ரயிலடிக்குச் செல்கையில் சூர்யாவின் மனோநிலைக்கும் அவளுடைய மனோ நிலைக்கும் அதிக வித்தியாசம் இருக்கவில்லை. எதைக் கண்டாலும் ஆச்சரியம்.... எதைக் கண்டாலும் சந்தோஷம். பதினைந்து வயசு குறைந்துவிட்ட மாதிரி...!

ஸ்டேஷனுக்கு அப்பா வந்திருந்தார். அந்த வெள்ளைத் தலை மயிரையும் பஞ்சகச்ச வேஷ்டியையும் பார்த்ததுமே மனசில் ஒரு பிரவாகம் கிளம்பிற்று. கிட்ட நெருங்கியதும் 'எத்தனை இளைத்துச் சுருங்கிப் போய்விட்டார்' என்று ஒரு விசனம் படர்ந்தது.

''வாம்மா! வாடா பயலே. நன்னா வளர்ந்துட்டான்மா!''

''இரண்டு வருஷமாச்சே. நீங்க எப்படி இருக்கேள்பா?''

''இருக்கேன்மா, கொஞ்சம் ஹை பிளட் ப்ரஷர். அதான் சித்தப்படுத்தும்.''

''அம்மா எப்படி இருக்காப்பா!''

''அவ சாதாரணமா இருக்கா, நல்ல வேளை...''

அப்பா டாக்ஸி பிடிக்கப் போனார்.

''அப்பா, டாக்ஸி வேண்டாம்பா. குதிரை வண்டியிலேயே போகலாம்.''

''எதுக்கும்மா? வேண்டாம். உனக்குக் கஷ்டமாக இருக்கும்.''

''இல்லேப்பா. எனக்கு ஆசையாயிருக்கு.''

''சூர்யாவுக்கு?''

''எனக்கும்.''

குதிரை வண்டியில் போகப் போகிற குஷியில் சூர்யா குதித்தான். உடம்பு குலுங்கியபடி அதில் போகும்போது சாலையில் இரு புறமும் இருக்கும் வேப்ப மரங்களையும் கூடவே ஓடிக் கொண்டுவரும் சிற்றாறையும் பார்க்கையில் கடந்துவிட்ட வருஷங்கள் எல்லாம் விலகிப் போய் மனசில் பழைய சந்தோஷம் புகுந்து கொண்டது.

கதவைத் திறந்து கொண்டு அம்மா வாசலிலேயே நின்றிருந்தாள் பளிச் சென்று சிரித்துக் கொண்டு.

''வாம்மா மாலதி, வாடா கண்ணு சூர்யா.''

சூர்யா இறங்குவதற்குள் அம்மா அவனைத் தாவிப் பிடித்துக் கொண்டாள்.

மாலதி உள்ளே வந்ததும் அம்மாவையும் அப்பாவையும் நமஸ்கரித்தாள். அம்மா கண்களில் நீர் மல்க அணைத்துக் கொண்டாள். மனசில் எத்தனை தாபங்களும் ஏக்கங்களும் வருத்தங்களும் இருந்தாலும் அவளைத் தூண்டித் துருவி எதையும் கேட்க மாட்டார்கள் இவர்கள். நாகரீகமானவர்கள்.

''உன்னுடைய ஆத்துக்காரரும் மாமியாரும் செளக்கியமா?''

''உம், செளக்கியம்.''

அவர்களுடைய நினைவே இப்பொழுது இல்லை என்று இவர்களுக்குச் சொன்னால் இவர்கள் அதிர்ந்து போய்விடுவார்கள்...

''உனக்குப் பிடிக்குமேன்னு கடலைக் கருவடாம் போட்ட அரைப்புளிக் குழம்பு பண்ணியிருக்கேன்.''

''ஓ அம்மா...!''

கைகால் கழுவி குசலம் பரிமாறி காப்பியைக் குடித்ததும் அவள் சூர்யாவின் கையைப் பிடித்துக் கொண்டு தோட்டத்துக்கு ஓடினாள். அவள் நினைவில் தங்கியிருக்கும் அரசமரம், பட்சிகள், பூக்கள், வண்ணாத்திப் பூச்சிகள், அப்படியே இருந்தன. நிஜங்களாய் தத்ரூபங்களாய். அதில் ஒன்று குறைந்தாலும் அவளுக்கு ஏமாற்றமாக இருக்கும் என்று நினைத்த மாதிரி. சூர்யா வண்ணாத்திப் பூச்சிகளின் பின்னால் ஓடிக்கொண்டிருந்தான். ''பார்த்தியா சூர்யா, பார்த்தியா? ஊர் எத்தனை அழகு பார்த்தியா?''

''ஆமாம்மா, எனக்கு ரொம்பப் பிடிச்சிருக்கு.''

'பதினைஞ்சு நாளுக்கு மேலே அங்கே இருக்க என்ன இருக் கிறது?' என்ற வார்த்தைகளை நினைத்து இப்பொது சிரிக்க வேண்டும் போலிருந்தது. அரசமரத்துப் பட்சிகள் எல்லாம் பைப்பிலிருந்து நழுவி ஓடிய சிற்றோடைகளில் 'பொளக் சதக்' என்று முங்கி முங்கி எழுந்தன. மறுபடியும் அந்த வார்த்தைகள் நினைவுக்கு வந்தன. காக்காயையும் குருவியையும் மட்டுமே பார்த்திருக்கும் மனிதர்கள் அப்படித்தான் பேசுவார்கள்...

''மாலதி! குளிச்சிட்டு சாப்பிட வாங்கோ ரெண்டு பேரும். சமையல் ஆறிப் போறது!''

''இதோ!''

லேசில் வர மறுத்த சூர்யாவை இழுத்துக் கொண்டு அவள் உள்ளே ஓடினாள்.

நேரம் ஓடிவதே தெரியாமல் ஓடிக் கொண்டிருந்தது. பகலெல்லாம் ஊர்க்கதைகள் பேசிக்கொண்டு தோட்டத்தைச் சுற்றிக் கொண்டு, மாலை பிள்ளையார் கோவிலுக்குப் போய்க் கொண்டு. ஓ, எத்தனை ரம்யமான ஆனந்தமான நாட்கள்... இன்னும் ஒரு வார்த்தில் ஊருக்குப் புறப்படவேண்டும் என்கிற நினைப்பே மனசில் ஒரு நெருடலை ஏற்படுத்திற்று. இந்தப் பதினைந்து நாள் விடுமுறை யெல்லாம் அவர்கள் பெரிய மனது பண்ணி உனக்களித்திருக்கும் கருணை என்கிற நெருடல்.

அன்றைக்கு சூர்யா சுரத்தில்லாமல் இருந்தான். வண்ணாத்திப் பூச்சிகள் பின்னால் ஓடத் தெம்பு இல்லாதவன் மாதிரி. தோட்டத்தில் ஒரு மூலையில் உட்கார்ந்து கொண்டான்.

''என்ன உக்காந்துட்டே?''

''இன்னிக்கு உட்கார்ந்துண்டு பார்க்கலாம் போல இருக்கு. உக்காந்துண்டு பார்த்தா எல்லாம் இன்னும் அழகாத் தெரியறது.''

அவள் சிரித்துக் கொண்டு அவன் அருகில் உட்கார்ந்தாள்.

''அம்மா! எனக்கு இந்த ஊர் ரொம்பப் பிடிச்சிருக்கு.''

''எனக்கும்.''

''இங்கேயே இருந்துடலாம் போல இருக்கு.''

''அதெப்படி? நீ படிக்கணும், நல்ல ஸ்கூலிலே. அப்பா இருக்கிற இடத்திலே தானே நீ இருக்கணும்?''

அவன் யோசனையுடன் தன்னைச் சுற்றிப் பார்த்தபடி உட்கார்ந்திருந்தான்.

பிறகு மெல்லிய குரலில் சொன்னான்.

''இங்கேயே இருந்துடலாம்.''

அவளுக்குத் திகைப்பாக இருந்தது அவன் பேசியது. இந்தக் குழந்தையின் பார்வையில் என்னவெல்லாம் பட்டிருக்கிறது? என்ன மாதிரி சுவடுகள் ? ஏதாவது தீவிரமான சிந்தனையின் வித்து விழுந்து விட்டிருக்குமோ? அவளுடைய ஏக்கங்கள் மனவருத்தங்கள் எல்லாம் அவன் புரிந்து கொண்டிருப்பானோ?

''அம்மா எனக்குத் தலையை வலிக்கிறது.''

அவள் சட்டென்று சுயநினைவுக்கு வந்தாள்.

''ஏண்டா கண்ணா?''

அவள் கவலையுடன் அவனுடைய நெற்றியைத் தொட்டுப் பார்த்தாள், லேசாகச் சுட்டது.

''வா உள்ளே வா. வெய்யில்லே உக்காந்துக்க வேண்டாம். மாத்திரை தரேன். கொஞ்ச நேரம் தூங்கு. சரியாய்ப் போயிடும். வெறும் வயிற்றோடு இருக்கிறாயே'' என்று ரஸம் சாதம் கரைத்துக் கொடுத்தாள். அவன் உடனே அதை வாந்தி எடுத்தான், அவளுக்குக் கவலையாகப் போயிற்று. ஒரு தலைவலி மாத்திரை கொடுத்து படுக்க வைத்தாள். அம்மா தொட்டுப் பார்த்து 'லேசான ஜுரம்தான். நான் கஷாயம் வெச்சுத் தரேன். சரியாகப் போயிடும்' என்றாள். தர்மா மீட்டரில் 100 டிகிரி ஜுரம் தெரிந்தது. அவள் மருந்தையும் கொடுத்து கஷாயத்தையும் கொடுத்து ஆண்டவனையும் வேண்டியபடி இருந்தாள். காலையில் ஜுரம் குறையாமல் இருந்தால் ஆஸ்பத்திரிக் குக் கொண்டு போய்க் காண்பிக்கலாம் என்று இருந்தாள். சாப்பிடவும் பிடிக்காமல் படுக்கவும் பிடிக்காமல் சூர்யாவின் பக்கத்திலேயே அவள் உட்கார்ந்திருந்ததைப் பார்த்து அம்மா கடிந்து கொண்டாள்.

''குழந்தைன்னா சளி காய்ச்சல்னு வராதா? இதுக்கெல்லாம் நீ இப்படி ஆடிப் போகலாமா?''

மனசு ஆடித்தான் போயிற்று. சொல்லத் தெரியாத கலவரம் அடிவயிற்றைக் கலக்கியது...

இரவு பத்து மணி சுமாருக்கு திடீரென்று சூர்யாவின் உடம்பில் இழுப்பு ஏற்பட்டது. அவள் பதறிப் போனாள். உடனடியாக ஆஸ்பத்திரிக்குப் போகவேண்டும் என்று அவள் பறந்தாள். அப்பா எப்படியோ டாக்ஸியை சீக்கிரமாகப் பிடித்துக்கொண்டு வந்தார். குழந்தை கண்ணே திறக்காமல் கிடந்தான். அவளுடைய மனசு ஜபித்துக் கொண்டே இருந்தது. ஆண்டவனே சோதிக்காதே. சோதிக்காதே. என்னால் தாங்க முடியாது...

ஆஸ்பத்திரியை அடைந்ததும் அங்கிருந்த டாக்டர் பரி சோதித்து ஊசி போட்டு சிகிச்சை அளித்தும் அடுத்த அரை மணியில் சூர்யாவின் உயிர் போயிற்று. நம்பவே முடியாத அதிர்ச்சியில் அவள் மூர்ச்சித்து விழுந்தாள்.

சடலத்தை முன் வாசல் அறையில் கிடத்தி எல்லோரும் சுற்றிலும் உட்கார்ந்து அழுகையிலும் அவளுக்கு அதெல்லாம் நம்பமுடியாத திக்பிரமை இருந்தது.

''இங்கேயே தங்கிடலாம்.''

குழந்தையின் வாயில் ஏன் அந்த வார்த்தை வந்தது?

இந்த மண்ணில் சாகப் போகிறோம் என்று அவனுக்குத் தெரிந்திருக்குமா? அது எப்படி அவன் நினைத்துக் கொண்டு செத்துப் போனவன் மாதிரி செத்துப் போனான்? அனுபவிக்க வேண்டிய தெல்லாம் அந்தப் பத்து நாட்களுக்குள் அனுபவித்துத் திருப்தி அடைந்த மாதிரி! அவளால் நம்ப முடியவில்லை. அவன் இங்குதான் எங்கோ இருக்க வேண்டும். இந்த மண்ணில், இந்தக் காற்றில், அசையும் மலர்களில், பட்சிகளுக்கு நடுவே ஒரு பட்சியாக...

''அதுக்கு மேலே இருக்க அங்கே என்ன இருக்கு?''

அவளுக்கு திடீரென்று தூக்கிவாரிப் போட்டது. ஓ. நமக்கு துக்கப்படுவதற்கும் சுதந்திரமில்லை என்ற உணர்வு ஏற்பட்டது. இந்த சாவுக்கு பல பேருக்கு தான் பதில் சொல்லியாக வேண்டும் என்கிற நினைப்பு வந்தது.

''அங்கெல்லாம் போனால் சூர்யாவுக்கு ஒத்துக்கொள்ளாது. போஷாக்கு போறாது'' என்று ராமகிருஷ்ணன் சொன்னது ஞாபகத் திற்கு வந்தது. அடி வயிற்றைச் சுற்றிக் கொண்டு ஒரு பயம் ஏற்பட்டது. நான் இப்பொழுது என்ன செய்வேன்? அவர் வந்து கேட்டால் நான் என்ன சொல்வேன்? நான் அப்பவே சொன்னேனே நீ கேட்டியா என்று கேட்டால்? உனக்கு குழந்தையின் நலம் பெரிசில்லை. உன் பிறந்தகத்துச் சீராடல்தான் பெரிசு என்றால்?

குழந்தையின் நலத்திற்கு இங்கே என்ன குறைச்சல்? நன்றாக சாப்பிட்டான். நன்றாக விளையாடினான். பட்டணத்தில் இருந்ததை விட எத்தனை சந்தோஷமாக இருந்தான்! இதையெல்லாம் அவர்கள் நம்புவார்களா? அது என்ன ஜுரம்? எட்டு மணி நேரத்தில் ஆளையே விழுங்கிவிடக்கூடிய ஜுரமாக ஒரு 100 டிகிரி ஜுரம் இருக்கும் என்று யார் நினைப்பார்கள்?

அவளுக்கு கண்களிலிருந்து நீர் பெருகிய வண்ணம் இருந்தது.

ஆண்டவனே! ஏன் இப்படிச் செய்தாய்? என் குழந்தையை என்னிடமிருந்து பிரிக்க உனக்கு எப்படி மனசு வந்தது? நான் என்ன தப்பு செய்தேன்?

இரண்டு வருஷ இடைவெளிக்குப் பிறகு பிறந்த இடத்தைப் பார்க்க ஆசைப்படுவது ஒரு நியாயமற்ற ஆசையா? கணவனுக்கும் மாமியாருக்கும் பரிபூரணமான சம்மதம் இல்லையென்று தெரிந்து ஆசையை நிறைவேற்றிக் கொண்டது தப்பா! அதற்கு இத்தனை பெரிய தண்டனையா? ஆண்டவனே நீ நியாயமற்றவன்! கருணையற்றவன்!

வாசலில் வண்டி வந்து நிற்கும் ஓசை கேட்டது. அவர்கள் வீட்டு அம்பாஸிடரின் ஓசை. அவளுக்கு குபீரென்று ஒரு பயம் நெஞ்சை அடைத்தது. ஏதோ கொலைக்குற்றம் செய்த மாதிரி.

ஓ, இவர்களுக்கு நான் என்ன பதில் சொல்லப் போகிறேன்! காலடி ஓசைகள் நெஞ்சில் அறைகிற மாதிரி இருந்தது.

ராமகிருஷ்ணனின் முகத்தில் அதிர்ச்சியும் சோகமும் தெரிந்தது. அவனுடைய அம்மாவின் முகத்தில் ஒரு கோபமும் தெரிந்தது.

இருவரையும் பார்த்ததும் அவள் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாமல் அழுதாள்.

ராமகிருஷ்ணன் சடலத்தைக்கூடப் பார்க்காமல் கிடுகிடுவென்று ஆக்ரோஷத்துடன் மாமனார் எதிரில் போய் நின்றான்.

''இதுக்கு என்ன அர்த்தம்னு சொல்லுங்கோ? பத்து நாள் முந்தி நன்னாயிருந்த என் பிள்ளை எப்படி செத்துப் போனான்...?''

அப்பாவின் கண்களில் சரம் சரமாய் நீர்.

''நேத்து நன்னாயிருந்தானே மாப்பிள்ளே? நேத்து சாயங்காலம் வரைக்கும் நன்னா விளையாடிண்டிருந்தானே...?''

''பின்னே எப்படி...?''

''உன் பொண்டாட்டிக்கு தோட்டப் பைத்தியம்டா ராம கிருஷ்ணா. வேறெ எந்த யோசனையும் இல்லாம மோகினியாட்டம் ராத்திரி பகலில்லாம சுத்திண்டிருந்திருப்பா. குழந்தையும் கூடவே இருந்திருப்பான், ஏதாவது விஷ ஜந்து கடிச்சிருக்கும்...''

''அதெல்லாம் இல்லே சம்பந்தியம்மா. சாயந்திரம் லேசா ஜுரம் அடிச்சது. டாக்டர்கிட்டே போகணும்னு நினைக்கிறதுக்குள்ளே இழுப்பு வந்துடுத்து. உடனே ஆஸ்பத்திரிக்கு அழைச்சிண்டு போனோம். பெரிய டாக்டர்தான் பார்த்தார். ஆஸ்பத்திரிக்குப் போய் ஒரு மணி நேரத்திற்கெல்லாம் பிராணம் போயிடுத்து.''

''அப்பவே சொன்னேன், அங்கெல்லாம் போனா நம்ம குழந்தைக்கு ஒத்துக்காதுன்னு... கேக்கல்லியே உன் பெண்டாட்டி!''

''தாமதமா டாக்டர்கிட்டே போயிருப்பேள். ஆஸ்பத்திரி என்ன மாதிரி ஆஸ்பத்திரியோ?''

''அவாளுக்கென்னடா ராமகிருஷ்ணா! நம்ம பண்டம் போச்சு!''

அவளுடைய குனிந்த தலை இன்னும் குனிந்தது.

இவர்கள் வீட்டைச் சேர்ந்தவள் நாம் என்று நினைக்கவே அவமானமாக இருந்தது. மனிதர்கள்தானா இவர்கள்? பணம் இருந் தால் என்ன வேண்டுமானாலும் பேசிவிடாலம் என்று நினைக்கிற அகந்தை பிடித்தவர்கள். இவர்கள் வாயில் மறுபடி மறுபடி விழும்படி ஏன் செய்கிறாய் ஆண்டவனே...? நீ கருணையற்றவன். காரண மேயில்லாமல் என் குழந்தையைக் கொன்றவன். புத்திர சோகத்தில் என்னை ஆழ்த்தி ஒரு குற்றவாளி மாதிரி இவர்கள் எதிரில் நிறுத்தியிருப்பவன்.

அவர்கள் திருப்பித் திருப்பி சொன்னதையே சொல்லிக் கொண்டிருந்தார்கள். குழந்தையைக் கொலை செய்து விட்டீர்கள் நீங்கள் என்று நிரூபிக்கப் போகிற மாதிரி... அவளுக்கிருந்த துக்கத்திலும் எரிச்சல் வந்தது. அந்த எரிச்சல் அடக்க முடியாமல் போய் விடுகிறமாதிரி மண்டையில் சுருசுருவென்று ஒரு புகைச்சல்

கிளம்பிற்று. சட்டென்று அவளுள் ஒரு திகைப்பு ஏற்பட்டது. இவர்களது பேச்சைக் கேட்கத் கேட்கத் தன் மனசே மாறிவிடுமோ என்று பயம் ஏற்பட்டது. இவர்களது பாஷையையே நாமும் பேச ஆரம்பித்து விடுவோமோ? மனசே வெறுத்து பார்வையே சுருங்கி அன்பெல்லாம் வற்றி நம் சுபாவமே மாறிப் போகுமோ...

குழந்தையின் காரியமெல்லாம் முடிந்த பிறகு அந்த ஊர் மண்ணுக்கும் காற்றுக்கும் வண்ணாத்திப் பூச்சிகளுக்கும் சூர்யாவை தானமாகக் கொடுத்துவிட்ட மாதிரி அவளுள் ஒரு பிரமை ஏற்பட்டது. கணவன் வீட்டுக்குத் திரும்பியதும் ஒவ்வொரு நிமிஷத்தையும் கழிப்பதே சிரமமான காரியமாகப்போய் விட்டது. எதற்கெடுத்தாலும் சூர்யாவின் நினைப்பு. சூர்யாவுக்கு இது பிடிக்கும் சூர்யாவுக்கு அது பிடிக்காது... சூர்யாவுக்கு ஸ்கூலுக்கு நேரமாகி விட்டது.. சூர்யா வரும் நாழியாகி விட்டது. சூர்யா... சூர்யா...

ஆண்டவனே அவனை எனக்குத் திருப்பிக் கொடு. மரியாதை யாய்த் திருப்பிக் கொடு, இல்லாவிட்டால் உன்னை சும்மாவிட மாட்டேன்... என்னை ஏமாற்றினதற்கு சும்மா விடமாட்டேன். ஆண்டவனே... என் கண்ணீரையெல்லாம் மாலையாய் நீ ஏற்றுக் கொள்... புலம்பலையெல்லாம் பாசுரமாக ஏற்றுக்கொள்... சூர்யாவைத் திருப்பிக் கொடு... சூர்யா... சூர்யா...

மண்டை வெடித்துவிடும் போல் இருக்கும். பாதிநேரம். பஞ்சுப் பொதிகளாய். புகை மூட்டமாய் மனசைச் சுற்றி கண்களை இருட்டிக் கொண்டு வரும்.

''குழந்தையைப் பெத்தாப் போதுமா? அதைப் பார்த்துக்கத் தெரிய வேண்டாமா?''

ஆண்டவனே எனக்குப் பொறுமையைக் கொடு... என் பண்யை இழக்காமலிருக்கும் வழியைச் சொல்லு...

''நினைக்க நினைக்க வயித்தை எரியறதுங்கறேன். ரத்தினமாய் இருந்த அந்த குழந்தையைச் சாகடிக்கணும்னா எத்தனை அஜாக் கரதையா அவா இருந்திருக்கணும்? எங்க கிட்டே இருந்திருந்தா குழந்தை நிச்சயம் செத்திருக்க மாட்டான்.''

அப்படியா? இவர்களால் சூர்யாவைப் பிடித்து நிறுத்தியிருக்க முடியுமா? எத்தனை நம்பிக்கை இவர்களுக்குத் தங்களுடைய பலத்தின் மேல்! பணம் என்பது இத்தனை பலத்தைக் கொடுக்குமா?

நித்தியம் ராமகிருஷ்ணன் எதற்காவது கத்தினான்.

''உன் அஜாக்ரதையினாலே தான் குழந்தை செத்துப் போனான்...''

அதைக் கேட்கக் கேட்க அது உண்மையாகத்தான் இருக்க வேண்டும் என்று ஒரு பிரமை ஏற்பட்டு அவளைக் கலங்கடிக்கும்... இரவு அவனுடன் தனித்திருக்கையில் அவனுடன் ஒண்டிக் கொண்டு அவள் சப்தமில்லாமல் அழுவாள்.

''சூர்யா எனக்கும் தானே குழந்தை? அவன் போனதுல எனக்கு வருத்தமில்லையா?''

''வருத்தம் மட்டும் இருந்து என்ன பிரயோஜனம்? பொறுப்புணர்ச்சி வேண்டாமா?''

மனசில் ஏற்பட்டுப் போன குற்ற உணர்வில் அவன் சொல்வது வாஸ்தவம்தான் என்று அவள் குன்றிப் போவாள். இன்னும் அதிக மாக அழுவாள். சில சமயங்களில் ராமகிருஷ்ணன் சற்று நெகிழ்ந்து அவளை நெருங்கி சமாதானப் படுத்துவான். அந்த நெகிழ்ச்சியும் ஸ்பர்ச ஆகர்ஷிப்பினால் ஏற்பட்டது என்று அவளுக்குத் தோன்றும்.

ஒரு நாள் அவள் தூங்கிக் கொண்டிருக்கையில் சூர்யா கூப்பிடுகிற மாதிரி இருந்தது.

''அம்மா அம்மா!''

''என்னடா கண்ணா?''

''உங்கிட்ட வரட்டுமா?''

''வாடா கண்ணா!''

அவள் எழுந்து அவனை அணைத்துக் கொள்வதற்குள் கனவிலிருந்து விழித்துக் கொண்டாள். உடம்பெல்லாம் ஏதோ பர

வசம் ஏற்பட்ட மாதிரி இருந்தது. மனசில் ஏதோ பிரவாகம் பொங்கிற்று. அவள் விளக்கைப் போட்டு சூர்யா அங்கே எங்கேயோ ஒளிந்து கொண்டிருக்கிற பாவனையுடன் தேடினாள்.

ராமகிருஷ்ணன் கண்ணைத் திறந்து புருவத்தைச் சுருக்கிக் கேட்டான்.

''என்ன பண்றே விளக்கைப் போட்டுண்டு அர்த்த ராத்திரியிலே?''

சட்டென்று புலன்கள் விழித்துக் கொண்ட உணர்வில் அவள் ஒரு ஆயாஸத்துடன் விளக்கை அணைத்துவிட்டுப் படுத்தாள். பிறகு தூக்கம் வரவில்லை. மனசு நிறைந்து போன மாதிரி இருந்தது. சூர்யா பேசினது சத்தியமானது என்று தோன்றிற்று. உள்ளம் ஜபித்துக் கொண்டேயிருந்தது. ஆண்டவனே சூர்யாவைத் திருப்பிக் கொடு...

மறுநாள் அவள் ராமகிருஷ்ணனிடம் தன் கனவைப் பற்றிச் சொன்னாள்.

''உனக்குப் பைத்தியம்தான் பிடிச்சிருக்கு...''

''நிஜம்மாவே எனக்குத் தோணறது. சூர்யா நம்மகிட்ட வருவான்னு...''

''மறுபடி அவனை சாகடிக்கவா?''

அவள் அதிர்ந்து போனாள்.

விழிகள் பிதுங்க அவனைப் பார்த்தாள். இந்த மாதிரி விஷத்தைக் கக்குவது சாத்தியமா? இவர்கள் நம்மை வார்த்தை களாலேயே சாகடிக்கப் போகிறார்கள்... பைத்தியம் பிடிக்கிற வரை சாடப் போகிறார்கள்...

மறுபடியும் சாகடிக்கவா?

மறுபடியும் சாகடிக்கவா?

மறுபடியும்...

அவளுக்கு மண்டை வெடித்துவிடும் போலிருந்தது... நினைவுகள் ஏக்கங்கள் தாபங்கள் விசுவரூபமாய் எழும்பிச் சிதறி விடுவோம் என்று பயமுறுத்தின.

மறுபடியும் சாகடிக்கவா...? அவள் மண்டையை அழுத்தி இரண்டு கைகளாலும் பிடித்துக் கொண்டாள். எதையும் செய்ய முடியவில்லை. அவள் குளித்தாளா சாப்பிட்டாளா என்றுகூட கவனிக் காமல் ஒரு அலட்சியத்துடன் மாமியார் தன் மதிய சாப்பாட்டை முடித்துக் கொண்டு படுக்கப் போனாள்.

அவள் பிரமை பிடித்தவள் போல் வராண்டாவில் உட்கார்ந் திருந்தாள். மணிப்ளாண்டின் ஏறுமாறான கொடிகள், ஸர்ப்பம் போன்ற கொடிகள் கண்ணுக்குப் பட்டது. மனசில் திடீரென்று ஒரு எண்ணம் தோன்றிற்று. அவள் இந்த வீட்டில் இருக்கிற வரை சூர்யா திரும்பி வரமாட்டான் என்று நிச்சயமாகப் பட்டது. அவள் சட்டென்று எழுந்தாள். தன்னுள் குமுறும் வெறியை அடக்க முடியாதவள் போல் அந்த மணிப்ளாண்டின் கொடிகளை ஆத்திரத்துடன் பிய்த்துவிட்டாள்.

படுக்கையறைக்குச் சென்று ஒரு சூட்கேஸில் சில உடுப்புகளைத் திணித்துக் கொண்டு ரயில் செலவிற்கு வேண்டிய பணத்தை எடுத்துக் கொண்டு கிளம்பினாள்.

வராண்டாவைத் தாண்டிக் கொண்டு செல்கையில் மணி ப்ளாண்டின் கதியைப் பார்த்து ஒரு சிரிப்பு வந்தது.

அவள் திடுதிப்பென்று வந்து நின்ற கோலத்தைப் பார்த்து அம்மாவும் அப்பாவும் அரண்டு போனார்கள்.

''வாம்மா, ஒரு கடிதாசு போடக்கூடாதோ. ஸ்டேஷனுக்கு வந்திருப்பேனேம்மா?...''

திடீரென்று அவளுக்கு மிக மிக களைப்பாக இருந்தது. யாரும் எந்தக் கேள்வியையும் கேட்காவிட்டால் நன்றாக இருக்கும் என்று தோன்றிற்று.

''எழுதறதுக்கெல்லாம் அவகாசம் இருக்கல்லேப்பா...''

''அப்படி என்னம்மா அவசரம்?''

இது என்ன கேள்வி என்கிற மாதிரி அவரை அவள் பார்த்தாள்.

''என் பிள்ளையைப் பார்க்க வேண்டிய அவசரம். சூர்யா இங்கேதான் இருக்காம்ப்பா.''

அம்மாவும், அப்பாவும் நயன பாஷையில் ஏதோ பேசிக் கொண்டார்கள். கண்களில் துளிர்ந்த நீரை அவளுக்குக் காண்பிக் காமல் அவளை ஒரு அனுதாபத்துடன் பார்த்தார்கள். அப்பா அருகில் வந்து அவள் தோளைத் தொட்டார்.

''ஆமாம்மா. நீ சொல்றது வாஸ்தவந்தான். நீ முகத்தை அலம்பிண்டு காப்பி சாப்பிட வாம்மா.''

''நா இனிமே இங்கேதான்பா இருக்கப் போறேன். சூர்யாவுக்கு இங்கே இருக்கணும்னுதான் ஆசை.''

''இரும்மா. இப்பக் காப்பியைக் குடிச்சுட்டு சித்தப் படுத்துக்கோ.''

அவள் கிணற்றடியில் முகத்தைக் கழுவிக் கொண்டு இயல்பாக வந்தாள்.

காப்பியை நீட்டிய அம்மாவின் கண்கள் கலங்கியிருந்தன.

சூடான காப்பி உள்ளே இறங்குகையில் இதமாக இருந்தது.

திடீரென்று கண்ணை இருட்டிக் கொண்டு வந்தது. வயிற்றை என்னவோ செய்தது. அவள் கிணற்றடிக்குச் சென்று கடகடவென்று வாந்தி எடுத்தாள். அம்மா பதறிக்கொண்டு ஓடி வந்தாள்.

''என்னடிம்மா செய்யறது?''

அவள் வாயைக் கொப்புளித்து தண்ணீரை வாரி வாரி முகத்தில் விட்டுக் கொள்கையில் சடாரென்று மூளையில் ஒரு பொறி தட்டிற்று.

மனசில் ஒரு அவசர கணக்கைப் புரட்டுகையில் உண்மை நிதர்சன மாகி ஒரு பிரவாகம் பொங்கிற்று.

அவள் நிதானமாக அம்மாவைப் பார்த்துப் புன்னகைத்தாள்.

''ஒண்ணுமில்லேம்மா. நான் நன்னாத் தானிருக்கேன். இனிமே சந்தோஷமா இருக்கப்போறேன் பாரு!''

''சித்த உள்ளே வந்து படுத்துக்கோ.''

''இரு. கொஞ்சம் காத்தாட தோட்டத்தில் நடந்துட்டு வரேன். எனக்கு ஒண்ணுமில்லேம்மா, பயப்படாதே.''

அம்மா கவலை மிகுந்த பார்வையுடன் நிற்கையில் அவள் அரசமரத்தடிக்குச் சென்றாள்.

அந்த மரமும் பூக்களும் பட்சிகளும் தெய்வத்தின் வடிவங் களாக நெஞ்சை நிறைத்தன. அவள் கண்களில் நீர் நிறைந்தது.

ஆண்டவனே நீ கருணை மிக்கவன்...

அரச மரத்தடியில் அன்று சூர்யா உட்கார்ந்து கொண்டு சொன்னது நினைவுக்கு வந்தது.

''இங்கேயே இருந்துடலாம் போலிருக்கு.''

அவள் முகத்தில் புன்னகை படர்ந்தது.

''இருந்துடலாம்டா கண்ணா. இங்கேயே பட்சிகளோட பட்சியாய் வளரலாம். ஒன்பது மாதம் உன்னை மறுபடி சுமக்கறது எனக்குக் கஷ்டமில்லே...''

சாவி - 1979

